ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:







# திருப்புல்லாணி மாலை

விழுப்புரம் வ. உ. சி. வீதி, (நெ. 55)
ஸ்ரீநிவாஸ ப்ரஸாதத்தில் வாழும்
வழக்குரைஞர்
**K. வரததேசிகாசார்ய ஸ்வாமியின்**

மணிவிழா வெளியீடு

❋ — ❋

ஸ்ரீ நிவாஸம் அச்சகம்,
புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

விலை ரூ. 2-00] [தபால் தனி

ஸ்ரீ:

    

श्रीमते श्रीलक्ष्मीनृसिंह परब्रह्मणे नमः ॥

श्रीमते श्रीवण्शठकोप श्रीनारायण यतीन्द्र महादेशिकाय नमः ॥

# ஸ்ரீமதழகியசிங்கரின் ஸ்ரீமுகம்

(ஸ்ரீகார்யம், ஸ்ரீ அஹோபிலமடம்; கேம்ப்: ஸ்ரீ அஹோபிலம், A. P.)

நாளது ஆவணி மீ ச்ரவண நக்ஷத்திரத்தில் விழுப்புரம் அட்வகேட் ஸ்ரீ உ.வே. வித்வான் வரததேசிகாசார்ய ஸ்வாமிக்கு நடக்க இருக்கும் ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவ நன்னாளில் பழம்பெரும் நூலான 'திருப்புல்லாணி மாலை' என்பதை வெளியிடப்போவதாக அறிந்து ஆனந்திக்கிறோம்.

இந்த நூல் திருப்புல்லாணி க்ஷேத்திரத்தின் பெருமையையும், புல்லாணியெம்பெருமானின் பெருமையையும் மிகச் சிறப்பாகக் கூறுகிறது. இதன் ஆசிரியர் இதில் உள்ள ஒவ்வொரு பாடலிலும் ஒவ்வொரு திருக்குறளின் வரியை அடக்கியுள்ள அழகு அறிஞர்களுக்கு ஆனந்தம் பயப்பதாகும். எளிய தெள்ளிய நடையில் அமைந்துள்ள பாக்களைக் கொண்ட இந்த நூலை ஆஸ்திகர்கள் அனைவரும் பெற்றுப் பெரும் பயன் பெறவேண்டும்.

ஆஸ்திக ப்ரபுக்கள் அனைவருமே இந்த ஸ்வாமி காட்டிய வழியையே பின்பற்றிப் பழைய நூல்களையே தக்க தருணங்களில் வெளியிட்டால் உலகுக்கு உயர்ந்த நன்மை உண்டாம்.

இந்த ஸ்வாமி இவ்வாறே மேலும் பல்லாண்டுகள் இல்லாளுடன் இனிது வாழ்ந்து நூற்றாண்டுவிழாவையும் கண்டு நூல்பலவற்றை வெளியிட ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹனைப் ப்ரார்த்திக்கிறோம் என்று ஸ்ரீமத் அழகிய சிங்கர் செய்தருளிய மங்களாசாஸனத்தை இந்த ஸ்ரீமுகத்தின் மூலம் விஜ்ஞாபித்துக்கொள்ளுகிறேன்.

ஸ்ரீ நியமனப்படி ஸ்ரீஸந்நிதி ஸ்ரீகார்யம்
ஸ்ரீ அஹோபிலமடம்.
தேதி: 14-8-93

ஸ்ரீ :

ஸ்ரீமதே ராமாநுஜாய நம :



# முன்னுரை

[ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்" ஆசிரியர், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி–17]

விழுப்புரத்தில் பிரபல வழக்குரைஞராய், நமது நண்பரான ஸ்ரீ. உ. வே. K. வரததேசிகாசார்ய ஸ்வாமி ஸ்ரீவைஷ்ணவஸம்ப்ரதாயத்தில் மிக்கஊற்றமுள்ளவர். ஏராளமான ஸம்ப்ரதாய நூல்களைச் சேமித்துவைத்து அவற்றை அநுபவிப்பதில் பெரும் பொழுதைக் கழிப்பவர். அத்தகைய ஸ்வாமிக்கு (30–8–93) ஸ்ரீமுக ஆவணித் திருவோணத்தன்று நடக்கும் மணிவிழாவில் "திருப்புல்லாணி மாலை" எனும் இந்நூல் வெளியிடப்படுகிறது.

இந்நூல் பலவருடங்களுக்கு முன் செந்தமிழ்ப் பத்திராதிபரான திருநாராயணய்யங்கார் ஸ்வாமியால் வெளியிடப்பெற்றது. தமிழ் கூறும் நல்லுலகால் தமிழ்மறையென்று போற்றப்பெறும் திருக்குறளின் ஒவ்வோரதிகாரத்திலிருந்தும் ஒவ்வொரு குறட்பாவை உள்ளடக்கிய 133 கட்டளைக் கலித்துறைப் பாக்களால் ஆனது இந்நூல். இந்நூலாசிரியரின் திருநாமத்தை அறிய முடியவில்லை; ஆயினும் தமிழ் வேதமான திவ்யப்ரபந்தங்களின் கருத்துக்களை உட்பொதிந்து கொண்டு திருப்புல்லாணியெம்பெருமானை ஒவ்வொரு பாடலிலும் போற்றும் பாங்கினைக் காணும்போது இவர் பரமவைணவர் என விளங்குகிறது.

இந்நூலை அச்சிடும்பணி நண்பரால் அடியேனுக்கு அளிக்கப்பட்டது. அதை ஓர் பெரிய பாக்கியமாகக் கருதுகிறேன்.

இத்தகைய நூல்கள் பலவற்றையும் வெளியிடுபவராய், நண்பர் வரததேசிகாசார்ய ஸ்வாமி பல்லாண்டுகள் வாழ அணியார்பொழில் சூழ் அரங்கநகரப்பனைப் பிரார்த்திக்கிறேன்.

அடியார்க்கடியவன்,

**ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்**

ஆசிரியர் "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்"

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அணிந்துரை

(Dr. V. V ராமாநுஜன், ஆசிரியர், யதிராஜ பாதுகா,
68, T. P. கோயில் தெரு, திருவல்லிக்கேணி சென்னை – 600005)

நமது ஸுஹ்ருந்மணியான விழுப்புரம் வழக்கறிஞர் ஸ்ரீ K. வரததேசிகன் ஸ்வாமி திருப்புல்லாணி மாலை என்ற பழைய நூலைத் தமது ஷஷ்ட்யப்தபூர்த்தி நினைவு மலராக மறுபதிப்பு செய்வது அறிந்து மகிழ்ந்து பாராட்டுகிறோம்.

திருப்புல்லாணி-தர்ப்பசயநம்-தெய்வச்சிலைப் பெருமாள் துதியாக அமைந்த இப்பாமாலையிலுள்ள 133 கட்டளைக் கலித்துறைச் செய்யுட்கள் ஒவ்வொன்றும் திருவள்ளுவரின் திருக்குறட்பா ஒன்றினை உள்ளடக்கியதாக உள்ளது. இப்பாமாலையைப் பாடிய திறமைமிக்க புலவர் யாரென்று தெரியவில்லை. இந்நூலின் காப்புச் செய்யுள் எம்பெருமான் விஷயமாகவல்லாமல் நம்மாழ்வார் விஷயமாகவுள்ளதால் இவர் சொரூபமறிந்த ஸ்ரீவைஷ்ணவர் என்பது தெளிவாகிறது. அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்று பிரித்து ஒவ்வொரு திருக்குறள் அதிகாரத்திலிருந்து ஒருகுறளைத்தேர்ந்தெடுத்து அதனைத் தம் செய்யுளுள் அமைத்து 133 பாட்டுக்களாகப் பாடியுள்ளார். இதில் கடவுள் வாழ்த்து (1)—

மூதுரை வள்ளுவர் அகர முதல எழுத்தெல்லாம்
ஆதிபகவன் முதற்றே உலகு எனலாயமைத்த
நீதி உனையன்றி நீணிலமுய்ய நெறிமற்றுண்டோ?
மாதவ! புல்லைத்தலத்தும் என்னெஞ்சத்தும்வாழ்பவனே!

இதில் திருவள்ளுவர் மறையின் முதல் குறளை உட்கொண்டுள்ள அழகு போற்றத்தக்கதாயுள்ளது. மூன்றும் பகுதியில் புணர்ச்சி மகிழ்தல் (111)

துனியகல் வித்து மகிழ்ந்து தாம் வீழ்வார்
மென்தோள் துயிலின்
இனிதுகொல் தாமரைக்கண்ணன் உலகு
என்றிசைத்தல்கண்டு
கனியிதழுண்டு எனைத்தோய்ந்தின்ப
வாரியில் கண் துயின்றுன்
தனிமலர்த் தாமரைக்கண்ணன்
புல்லாணித்தலைவன் வந்தே.

என்ற செய்யுள் மிகவும் இன்சுவையுடைத்து. இப்படிப் பல பாடல்களுள்ளன.

* புல்லாணி எம்பெருமான் பொய்கேட்டிருந்தேனே என்று ஆழ்வார் திருப்புல்லாணி எம்பெருமான் சொல்லைத் தஞ்சமாகப்பற்றி ஆவிகாத்திருந்தார். ஆழ்வாரும் ஆசாரியர் களும் போற்றும் இவ்வெம்பெருமான் விஷயமான இந்தப் பாமாலையைப் பல்லாண்டுகளுக்குப் பின் மறுபதிப்புச் செய்து தமிழுலகுக்களிப்பது ஒரு அரிய தொண்டாகும்.

இத்தொண்டினை உகந்து செய்ய முன்வந்துள்ள ஸ்ரீ உ.வே. வரததேசிகன் ஸ்வாமிக்கு நீண்ட ஆயுள், அரோக திடகாத்திரம் மற்றும் எல்லா ஸௌபாக்யங்களையும் அருள வேணுமென என்னையாளுடையப்பன் ஸ்ரீபார்த்தஸாரதி யெம்பெருமான் திருவடிகளில் ப்ரார்த்திக்கிறேன்.

V. V ராமாநுஜன்.



ஸ்ரீ:

# திருப்புல்லாணி மாலை

## காப்பு

பொன்மாலை சாத்தும் புயமாலை யேழ்புவ னம்புரக்கு
மன்மாலை மேல்வைத்த புல்லாணி (மாயனை) வள்ளுவனார்
சொன்மாலை யேற்றிக் கவிநூற்று முப்பத்து மூன்றுரைக்கப்
பன்மாலை நாட்டுங் குருகூரன் (பாதம் பணிகுவனே).

## (அவையடக்கம்)

திருவள்ளுவர்குறட் பாவைக் கலித்துறைச் செய்யுளிற்சேர்த்
தருள்புல்லை யாலைக்க (முல்பணிந்தேத்தலின் யாருமன்னேன்)
பெருமைகண் டென்சொலைப்புன் சொலென் னுதன்பு(பெற்ற
கருதி மதிப்பர் பரிதி மதிப்பெருங் காலமுமே. [தெனக்)

# நூல்

## அறத்துப்பால்

## கடவுள் வாழ்த்து

முதுரை வள்ளு வரக ரமுத லவெழுத்தெல்லா
மாதி பகவன் முதற்றே யுலகென லாயமைத்த
நீதி யுணையன்றி நீணில முய்ய நெறிமற்றுண்டோ
மாதவ புல்லைத் தலத்துமென் னெஞ்சத்தும் வாழ்பவனே. (1)

## வான்சிறப்பு

விண்ணான்று விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசியென லாற்புல்லை யூரின்மழை
வண்ணஞ் சிறந்தவன் வந்தரு ளாவிடில் வாடுமுயிர்த்
தண்ணம் பயிரெனற் கையமுண் டோவிச் சகதலத்தே. (2)

## நீத்தார்பெருமை

குறைந்தா ரெனுத்துறந் தார்பெரு மைதுணைக் கூறின்வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்றென லாகிற வாதுணைச்சேர்
துறந்தார் பெருமை யறிந்துமென் போலிகள் சொல்லவற்றே
மறந்தார்க ணிமறந் தேனுஞ்சொல் லாய்புல்லை வாமனனே. (3)

## அறன்வலியுறுத்தல்

பொன்னாட் டிறையோட் டயிராணி போற்றுமம் போருகப்பூ
மின்னாட்கு நாயக மென்றும்புல் லாணியில் வீற்றிருக்கு
மன்னார்க் கடியவர் சொல்வ ரழுக்கா றவாவெகுளி
யின்னாச் சொனான்கு மிழுக்கா வியன்ற தறமெனவே. (4)

### இல்வாழ்க்கை

மையற்ற வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படுமென்பர் புல்லைத் திருநகர்வா
ழையற் கடிமைப்பட் டில்வாழ்க்கை நீதி யமைந்தவரை
மெய்ம்மைக் கருத்(து)றச் சொல்வதன் றேவந்த மேன்மைகளே (5)

### வாழ்க்கைத் துணைநலம்

தருந்தக்க நாண்மட மச்சம் பயிர்ப்புத் தரித்தபெண்ணிற்
பெருந்தக்க யாவுள கற்பென்னுந் திண்மையுண் டாகப்பெறிற்
பொருந்தச்சொல் லத்தன்மை புல்லைப்பி ரான்றிருப் பூவடியை
வருந்தித் தவம்புரி மாதர்கற் பல்லது மற்றில்லையே. (6)

### புதல்வரைப் பெறுதல்

வாட்டமின் மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்சொற்
கேட்டலின் பஞ்செவிக் கென்றனர் தேவகித் தாய்க்குத்தந்தை
யேட்டலர்த் தார்வசு தேவனுக் கின்புற் றிருமையின்பங்
காட்டவந் தானிந்தக் காசினிக் கேபுல்லைக் காகுத்தனே, (7)

### அன்புடைமை

வற்றுத வன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்தின்
புற்றுரெய் துஞ்சிறப் பென்பது காணி வுலகுதனிற்
கற்று ருனதன்பர்க் கல்லாமல் வஞ்சக் கயவர்க்கென்று
சற்று கிலுமுரை யார்புல்லை வாழுந் தனிக்கொண்டலே. (8)

### விருந்தோம்பல்

மூக்கிற்கு மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்தென்ப ராற்சென்று நூற்றுவர்பா
லேக்குற் றிடாது விதுரன் மனைவிருந் தென்ன நின்றுன்
காக்கத் தனிப்பொரு ளானுன்புல் லாணியிற் கார்வண்ணனே. (9)

### இனியவைகூறல்

அல்லலுண் டாக்கிய வல்லவை தேய வறம்பெருகு
நல்லவை நாடி யினிய சொலினென்று நாட்டுதலாற்
கல்லெனும் பாவங் கரை(யுந் தருமங்) களிக்குமன்பிற்
சொல்லினி தாகத்தென் புல்லைநல் லாணைத் துதிப்பவர்க்கே. (10)

### செய்ந்நன்றியறிதல்

உள்ளு தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வாரென லாலிக் குவலயத்தில்
வின்னொரு போதொரு போதெடுத் தேத்த மிகவெனக்கொண்
டள்ளலம் போருகன் மேற்பதம் புல்லை யரிநல்குமே. (11)

### நடுவுநிலைமை

தேடாது புல்லையில் வந்தாயென் சிந்தையிற் சேர்ந்துவினை
யாடாய் சமன் செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணியென லானடுக் கூறிநின்றுள்
வாடா மலரின்க ணீடுழி யான்புக்கு வாழ்வதற்கே. (12)

### அடக்கமுடைமை

கமலமின் வாழ்வுடை யோர்புல்லை மாநகரீ ரடக்க
மமரரு ளுய்க்கு மடங்காமை யாரிரு ளுய்த்துவிடு
முமதடி பெற்றடங் குற்றோ ரமரரு ளுய்ப்பர்மைக்கூற்
றெமதடி பெற்றடங் காரிருள் சேர்வ ரெனச்சொல்வனே. (13)

### ஒழுக்கமுடைமை

பழுக்கும் பழமொழி பாரொழுக் கம்விழுப் பந்தரலா
லொழுக்க முயிரினு மோம்பப் படுமென் றுரைப்பர்நெஞ்சே
செழிக்குந் திருப்புல்லை மால்பதத் தன்பிற் றிருந்துவையே
லிழுக் கமில் லாமை யொழுக்கம் விழுப்பமெல் லாந்தருமே. (14)

### பிறனில்விழையாமை

எய்த மதன்கணை தாங்கா தெளிதொ வில்லிறப்பா
னெய்துமெஞ் ஞான்றும் விளியா துநிற்கும் பழியெனலான்
மைதவழ் மேனியன் புல்லையெம் மாயன் மலரடிக்கீ
ழுய்திறஞ் சேர்பவர் சேரார் பிறரில் லுறும்பழியே. (15)

### பொறையுடைமை

ஆவிக் கொடியவ ராயொறுத் தாரையொன் றாகவையா
ரேவைப்ப ரே*பொறுத் தாரைப்பொன் போற்பொதிந் தென்னப் புல்லைத்
தேவப் பொறையினன் றெவ்வவை யாதிங் கொருபொருளாய்ப்
பூவிற்பொன் போற்பொதிந் தேவைப்பன் வாழப் பொறை
மின்னையே. (16)

* ஏகாரம் விரிக்கப்பட்டிருக்கிறது.

### அழுக்காறாமை

அழுக்கக லாவழுக் காறுடை யார்க்கது சாலுமொன்னார்
வழுக்கியுங் கேடீன் பதுவென லாலென் மனத்தழுக்காற்
றிழுக்கறு தற்கு னிணையடி யேத்தி யிறைஞ்சுதற்கு
முழுக்கதி யெய்துதற் கென்றோ தினம்புல்லை முன்னவனே. (17)

### வெஃகாமை

பையாய் நிறைபொன் படுபயன் வெஃகிப் பழிப்படுவ
செய்யார் நடுவின்மை நாணு பவரெனச் செப்பினரான்
மெய்யார் பயனென் றுணக்கொள்வர் வேறொன்றை வெஃகுவரோ
மையார்கண் மாமங்கை மார்பாதென் புல்லையில் வாழ்விண்டுவே(18)

### புறங்கூறாமை

சொற்கிசை வாமெனக் கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ்சொல்
லற்கமுன் னின்றுபின் னோக்காச்சொ லென்ப ரறிவுடையோர்
கற்கி யுருவெடுத் தோன்புல்லை மால்கம லச்சரண
மெற்கெனக் கூறிப் புறங்கூறி டாம லிருப்பதென்றே. (19)

### பயனிலசொல்லாமை

நட்படி யார்க்கருள் புல்லைப் பிரான்றிரு நாமமனத்
துட்பய னீதென் றுரையாத மாந்தரை யோகடல்சூழ்
மக்கட் பயனில்சொற் பாராட்டு வானை மகனெனன்மக்
கட்ப தடியென (லென்றோத வள்ளுவர் காட்டியதே) (20)

### தீவினையச்சம்

சீர்க்கு ளறிவினு ளெல்லாந் தலையென்ப தீயசெறு
வார்க்குஞ்செய் யாவிட லென்றத ளுற்கொல்கொல் வாளரக்கன்
போர்க்கு மெலிதல்கண் டேநாளை வாவின்று போவெனவிப்
பார்க்கு ளுரைத்ததென் சொல்வேன்புல்லாணிப் பதியண்ணலே(21)

### ஒப்புரவறிதல்

தொல்கா சினியி லிடனில் பருவத்து மொப்புரவிற்
கொல்கார் கடனறி காட்சி யவரென லோர்தருமன்
செல்கானி னூற்றுவர் சொல்கோதி னுற்றவர் சீரமுது
நல்கா யெனநல்கி னுன்புல்லை மாலரு ணன்மைபெற்றே. (22)

### ஈகை

கரந்தில ராயினிப் பார்க்குமின் னாதிரக் கப்படுத
விருந்தவ ரின்முகங் காணு மளவென் றியம்புதலால்
வரந்தர வேண்டுமென் றுன்பாற்சொல் வேலை வலியவந்தாள்
புரந்தரன் பூசிக்கும் புல்லையில் வாழுந்தி பூத்தவனே. (23)

### புகழ்

போத நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்போற்
றுதுபுத் தேனுல கென்றார் புவிக்க ணருள்செயலா
லோது புகழ்கண் டயன்போற்றுந் தென்புல்லை யூரனைச்சென்
றேதமில் லாதுபுத் தேனுல கேத்தலியல்(வ)துவே. (24)

### அருளுடைமை

வம்பூ டிலாவருட் செல்வஞ்செல் வத்துட்செல் வம்பொருட்செல்
வம்பூ ரியார்கண் ணுமுளவென் றேதினர் மன்னியசெல்
வம்பூ தலத்துன் னருட்செல்வ மல்லது மற்றுமுண்டோ
வம்பூ தியமல ரோன்றந்தை யேபுல்லை மாநிதியே. (25)

### புலால்மறுத்தல்

உண்ணமு (தும்)பர்க்குதவுபுல் லாணி யொருவனந்நா
ளுண்ணவ ளித்தலத் துண்ணுமை யுள்ள துயிர்நிலையூ
னுண்ணவன் னுத்தல்செய் யாதள றென்றறிந் தோர்நரகி
னுண்ணலி யாருல குண்டபெம் மானரு ளுண்மையுற்றே. (26)

### தவம்

தளிவிடு மோவன்றிப் புல்லைக் கரசு தயைவெள்ளத்தோர்
துளிவிடு மோவறி யேன்வன் னிசுடச் சுடரும்பொன்போ
லொளிவிடுந் துன்பம் சுடச்சுட நோற்கிற் பவர்க்கொப்பதாய்
வெளிவிடு மாதவஞ் செய்யேற்கை யோபுகல் வேறில்லையே. (27)

### கூடாவொழுக்கம்

வேதங்கள் காணவு மெட்டா னெழுத்து விளங்குமெட்டான்
சீதங்க ளார்மலர்ச் செல்விக்கு வாய்த்த திருப்புல்லையான்
பாதங்கள் சேர்(ந்துய்க) வஞ்ச மனத்தரன் படிற்றொழுக்கம்
பூதங்க ளைந்து மகத்தே நகுமெ(னும்) புன்மையற்றே. (28)

## கள்ளாமை

காற்றூர் பொழிற்புல்லை மாலே யளவின்க ணின்றொழுகு
லாற்றூர் களவினகட் கன்றிய காத லவன்றெனலா
னேற்று னயன தளவின்க ணின்றனை வெண்ணெயுண்டல்
சாற்றுய் களவின்கட் காதலுன் விந்தையைச் சாற்றுவதே. (29)

## வாய்மை

தாய்மலர் மங்கை தழைத்தபுல் லாணிவந் தாய்பொய்ம்மையும்
வாய்மை யிடத்த புரைதீர்ந்த நன்மை பயக்குமெனிற்
றூய்மன மெய்ந்நன்மை யாதேனு மின்றிச் சொலும்பொய்ம்மைய
னுய்மெலிந் தேனைமெய் யாளாக் கினியுன் னடியிணைக்கே. (30)

## வெகுளாமை

நஞ்சினத் திற்கொடி தாக நகையு முவகையுங்கொல்
லுஞ்சினத் திற்பகை யும்முளவோபிற வென்றுரைத்த
வெஞ்சினத் தீமை யெனைமேவி டாதுனை வேண்டினன்மெய்
மஞ்சினத் த(ாபுல்லை வ)ந்தாய் சுகாநந்தவாரிதியே. (31)

## இன்னாசெய்யாமை

அன்னவன் றன்னுயிர்க் கின்னாமை தானறி வானென்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயலென்ற வள்ளுவர் வாய்மைகண்டும்
பின்னும் பிறருக்கின் னாமைசெய் பேதை யிருளகலப்
பொன்னுறு சோதியைக் கண்டுகொண் டேன்திருப் புல்லையிலே. (32)

## கொல்லாமை

ஆதி யருந்தமிழ் வள்ளுவ னல்லா றெனப்படுவ
தியாதெனின் யாதொன் றுங் கொல்லாமை சூழு நெறியெனலா
லோது முயிரைக்கொல் லாமைநல் லாறுற் றுனதுதிருப்
பாத மலர்ப்பணி யான்செய்வ னேபுல்லைப் பார்த்திபனே. (33)

## நிலையாமை

ஒன்றில்லை யுன்செய லல்லா னெருந லுளனொருவன்
இன்றில்லை யென்னும் பெருமை யுடைத்திவ் வுலகுதனிற்
கொன்றில்லை யென்னுங் கொலைபொயுள் ளேன்புல்லைக்கோவெனையா
ணன்றில்லை யாயி னிலையில்லை யாளி னரகில்லையே. (34)

### துறவு

நாநோக்கி நின்செய னின்பொரு ளென்னமெய் நல்குபுல்லைச்
சேனோக்கி மாநண்ப யானென தென்னுஞ் செருக்கறுப்பான்
வானோர்க் குயர்ந்த வுலகம் புகுமென்று வையகத்து
ளானோர்க்கு வள்ளுவர் மேனு (ளுரைத்த)ன ரன்புவைத்தே. (35)

### மெய்யுணர்வு

கருவார் பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்செம்
பொருள்காண் பதறிவென் றோதின ராற்றிருப் புல்லைநக
ருருண்மால் சிறப்பென்னுஞ் செம்பொருள் வாழ்வுடைத் தாதலினால்
வருபே ரதினேர்கண் டேழ்பிற விப்புன்மை மாற்றுவரே. (36)

### அவாவறுத்தல்

தென்னம் புவியகத் தின்ப மிடையரு தீண்டுமவா
வென்னுந்துன் பத்துட்டுன் பங்கெடி னென்ன விசைத்துமுன்னோர்
பொன்னின்பெண் மண்முத லாசையுட் சிக்கிப் புலம்பிநொந்தேன்
பின்னின் றெனைப்புரப் பாரில்லை புல்லைப் பெருந்தகையே. (37)

### ஊழ்

பற்றின் கருத்தின் படிநுண் ணியநூல் பலகற்பினு
மற்றுந்தன் னுண்மை யறிவே மிகுமெனின் மாந்தரெல்லாங்
கற்றிங் கிருக்கினு முண்மை யறிவினைக் காண்பதன்றி
முற்றும் பொருளினி யுண்டோ புல்லாணி முகில்வண்ணனே. (38)

அறத்துப்பால் முற்றும்.

## பொருட்பால்

### இறைமாட்சி

கட்பது மப்பெண் ணரசோ டரசிற் கதித்தபுல்லைக்
குட்பெரு மானைக்கொண் டாடிற் படைகுடி கூழமைச்சு
நட்பரணாறு முடை யா னரசரு ளேறெனத்தன்
பெட்பெனி யோனும் பெரும்பா ரரசு பெருக்கமுற்றே. (39)

### கல்வி

எண்ணம்பொ னெண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கென் பதுபுல்லைக் கஞ்சமலர்ப்
பெண்ணின்ப நாதனெண் சீரெழுத் தன்றிப் பிறிதுமுண்டோ
மண்ணின்கண் மாடு மறுமைக்கண் வீடும் வழங்குதற்கே. (40)

### கல்லாமை.

நார்முற் றிடாநின்ற கல்லா தவரு நனிநல்லர்கற்
றூர்முற்சொல் லாதிருக் கப்பெறி னென்ப தகத்திலெண்ணெண்
சீர்முற்றுங் கற்றவர் கல்லான்போல் லானெனச் செப்புமெனப்
பார்முற்றுங் காப்பவன் காப்பான்புல் லாணிப் பதியினின்றே. (41)

### கேள்வி

அத்தனை செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்செல்
வத்துளெல் லாந்தலை யென்றுரைத் தார்புல்லை வாழ்மலர்ப்பெண்
சித்த மனநின சீர்த்தியைக் கேட்குஞ் செவிக்குநிகர்
ஒத்திடன் மற்றில தாற்செவிச் செல்வ முயர்வனவே. (42)

### அறிவுடைமை

இறைவ திருப்புல்லை மாலே திருவுள்ள மென்கொ(க)லெவ்வா
துறைவ துலக முலகத்தொ டவ்வ துறைவதறி
வறைவது நூல்கண் டுலகத் தியல்பறி யாதுநின்ற
மறைவது மாறநின் பேரறி வென்று வருமெனக்கே. (43)

### குற்றங்கடிதல்

பவமன்னு துன்ப வினையணு காதுபற் றுள்ளமென்னு
மிவறன்மை யெற்றுள்ளு மெண்ணப் படுவதொன்றன் றெனநூற்
றுவர்மன்ன னெஞ்சினெண் ணுமைகண் டைவ ருடன்றுணைச்சென்
றவனென்னு மாதிபுல் லாணிப் பிரான்ற னடியவர்க்கே. (44)

### பெரியாரைத்துணைக்கோடல்

தழுவியென் றம்மிற் சிறியார்தம் மிற்பெரி யார்தமரா
வொழுகுதல் வன்மையு ளெல்லாந் தலையென் றுரைத்தனரான்
முழுமுத லோன்பெரும் புல்லையிற் கண்ணனை முற்றுமைவர்
தொழுது வலிமைபெற் றேங்குத ணுளுந் துலங்குவதே. (45)

### சிற்றினஞ்சேராமை

காப்பு மனநல மன்னுயிர்க் காக்க மினநலமெல்
லாப்புக ழுந்தரு மென்றூர் நலமென் றனைவதுநின்
றூப்பத மெண்ணு மனமின் மெய்யன்பர் புல்லைவளர்
மாப்பது மாசனி கொண்காசங் காழி மலர்க்கையனே. (46)

## தெரிந்துசெயல்வகை

ஏக்காலெர ராக்கங் கருதி முதலிழக் குஞ்செய்வினை
யூக்கா ரறிவுடை யாரென்ப தாற்புல்லை யூரமுதல்
போக்கா திருத்துதன் றந்தைமற் றுக்கம் பொருந்தவின்றி
வாக்கா லுரைத்துண்மை வாழ்ந்தா னிரணியன் மைந்தனன்றே. (47)

## வலியறிதல்

போக்கற்ற லென்றுயர் போக்கிவந் தாட்கொள் புகழுநல்லோர்
வாக்கிற் கியைபுல்லை மாலே யுடைத்தம் வலியறியா
ருக்கத்தி னூக்கி யிடைக்கண் முரிந்தார் பலருலகி
லாக்கப் பெருவலி நீயென்று கண்டுண ராதவரே. (48)

## காலமறிதல்

சீரார் பருவத்தொ டொட்ட வொழுக திருவினையே*
நீராமை யார்க்குங் கயிறென லாற்செங் கதிர்மகற்கு
நேரா யுரைத்தோர் வரையின்க ணுட்செல நின்றிலங்கைப்
போராடல் வென்று திருவையுற் றுன்புல்லைப் பூரணனே. (49)

## இடனறிதல்

பள்ளத் திரைகடற் சேதுவண் டாக்கப் பரிதிகுலத்
துள்ளூற்ற வள்ளல்புல் லாணி யிடங்கண் டுவந்துசென்று
விள்ளற் கருஞ்சமர் வென்றுன் றொடங்கற்க வெவ்வினையு
மெள்ளற்க முற்று மிடங்கண்ட பின்னல்ல தென்பதுவே. (50)

## தெரிந்துதெளிதல்

தமேவும் பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்கரு
மமேகட் டளைக்கல் லெனக்கண்டு வானவரைவளர்வித்
துமேலு மவுணரைத் தேய்த்து மதிசயந் தோன்றநின்ற
னிமேதினி யுண்டுமிழ் வோன்புல்லை யூரி லிருப்பவனே. (51)

## தெரிந்துவினையாடல்

அன்றுய்ந் தவர்சொ லிதனை யிதனா லிவன்முடிக்கு
மென்றுய்ந் ததனை யவன்கண் விடலென லாற்கனகக்
குன்றூர்ந்த கொங்கைச் சனகியைத் தேடக் குறித்துநல்கும்
ஒன்றும்பொ னாழியை மாருதி பாற்புல்லை யூர்முகிலே. (52)

---

* ஏகாரம் விரிக்கப்பட்டிருக்கிறது.

### சுற்றந்தழால்

நத்தாற் றிகழ்வயற் புல்லாணி நாரண னல்கருளின்
பத்தாற்சொ லாதர வாற்றெண்டர் சூழப் படுமனநே
யத்தாற் கொடுத்தலு மின்சொலு மாற்றி னடுக்கியசுற்
றத்தாற் சுற்றப் படுமென்று முன்னேர்கண் டறைந்ததுவே. (53)

### பொச்சாவாமை

உறுதியுள் வள்ளுவ ரோதல்பொச் சாப்புக்கொல் லும்புகழை
யறிவினை நிச்ச நிரப்புக்கொன் றுங்கென லாலுனது
நறுமலர்ப் பாதத்தை நான்மறந் தாற்புகழ் நன்மையினிப்
பெறுவதற் கோர்செயல் காணேன்புல் லாணிப் பெருந்தகையே. (54)

### செங்கோன்மை

அயாவென் றுணைப்புக ழந்தணர் நூற்கு மறத்திற்குமா
தியாய்நின் றதுமன் னவன்கோல் புல்லாணித் திருவரசு
தயாநிதி முன்னின்கைச் செங்கோ லிராக்க தரைவென் றன்றே
மெயாயொவி வேதந் தருமமெக் காலும் விளங்குவதே. (55)

### கொடுங்கோன்மை

மாற்றார் படையன்றி வன்கொடுங் கோல வரையல்லற்பட்
டாற்ற தழுதகண் ணீரன்றே செல்வத்தைத் தேய்க்கும்படை
காற்று மரைப்புல்லை மாயோ னளக்குமிக் காசினியின்
மேற்று னிவையன்றி யென்சொல்வர் சீரற்ற வேந்தரையே. (56)

### வெருவந்தசெய்யாமை

சங்கோடு சக்கரஞ் சேர்புல்லை மால்கஞ்ச னுருயிரை
அங்கோட மாய்த்த தறியார்கொ லோவெரு வந்தசெய்வார்
செங்கோ னெறியொன் றிலனுய் வெருவந்த செய்தொழுகும்
வெங்கோல னுயி னொருவந்த மொல்லைக் கெடுமென்பதே. (57)

### கண்ணோட்டம்

செயத்தக்க பாவத் தினுமேற்செய் தேனைத் திருவருள்கூர்ந்
துயத்தக்க வாறுசெய் யாய்பெயக் கண்டுநஞ் சுண்டமைவர்
நயத்தக்க நாகரி கப்வேண் டுபவ ரெனப்புகன்றார்
பயத்த(க்க ரா)சலங் காத்தருள் புல்லைப் பதிக்கொண்டலே. (58)

### ஒற்றாடல்

எற்றின்றி யொற்று முரைசான்ற நூலு மிவையிரண்டுந்
தெற்றென்க மன்னவன் கண்ணென்ப ரீதுன் செயல்பொருந்தும்
முற்றின்ப மன்னர் முறைமைநின் பாத முளரியின்மேற்
பற்றென்று நான்பெறு வேனோபுல் லாணிப் பதிக்கொண்டலே. (59)

### ஊக்கமுடைமை

புல்லாய்வத் துள்ள முடைமை யுடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடுமென்ப தாலுனை நெஞ்சில்வைத்தோ
ரெல்லாரும் வாழ்வர் திருப்பாற் கடலிடத் தேபிறந்த
நல்லானை நெஞ்சிற்கொள் புல்லாணி யம்பதி நாயகனே. (60)

### மடியின்மை

நெடிய திருப்புல்லை நாரண னேநெடு நீர்மறவி
மடிதுயி லுங்கும் கெடுநீரார் காமக் கலனெனுமக்
கொடிய வினையனு காதெனி யேனை நின் கோகனகத்
தடியிற் படியவைத் தாண்டுகொண் டா(யென் னருட்கடலே.) (61)

### ஆள்வினையுடைமை

அருள்வினை செல்வத் திருப்புல்லை யூரண்ண லேமுயற்சி
திருவினை யாக்கு முயற்றின்மை யின்மை புகுத்திவிடும்
பெருகநின் னருட்பணிக் காளாய் முயற்சிபெற் றுந்திருவே
தருக முயற்றின்மை யாங்கலி தீருந் தகையெனக்கே. (62)

### இடுக்கணழியாமை

எடுத்தது வேயி னிசைவாசு தேவன்புல் லைக்கிறைநீர்
தடுத்தா ரணியிற் சிறியேனை நாடி நகைமகிழ்ச்சி
கொடுத்தாள்வ னேவிடுக் கண்வருங் கான குகவதனை
யடுத்தூர்வ தஃதொப்ப தில்லென லாற்ற னடியனென்றே. (63)

### அமைச்சு

ஒல்லைத் தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சது நீயமைச் சுக்கொடுத்த
வல்லவ மென்மூலை வல்லவள் பொன்மகள் வல்லவதென்
புல்லையில் வந்தனை வந்தனை செய்யப் புவியெங்குமே. (64)

### சொல்வன்மை

உற்ற வுரைகள் பலசொல்லக் காமுறு வர்மன் றமா
சற்ற சிலசொல்ல றேற்ரு தவரென லாயசில
சொற்றுதி யாதுணை வஞ்சகர் பாற்பல சொற்சொலக்கா
முற்றலைந் தேன்கலி தீர்த்தருள் புல்லை முகில்வண்ணனே. (65)

### வினைத்தூய்மை

எடுக்கப் படாவிடுக் கட்படி னும்மினி வந்தசெய்யார்
நடுக்கற்ற காட்சி யவரென்பர் நானினி நல்குரவாற்
றிடுக்கிட் டிளிவரல் செய்யக்கண் டெனைச் சிரிப்பரன்றே
வடுக்கட் பிராட்டி மணாளாபுல் லாணியென் மன்னவனே. (66)

### வினைத்திட்பம்

யாவுங் கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை யிடைக்கொட்கி
னொற்
ருவிழு மந்தரு மென்பத னுலு னடிமிசைநீங்
காவிருப் பம்பெற் றமைதற்கு வந்து கருணைசெய்வாய்
மூவடி மண்பலி முன்கேட்கும் புல்லை முதற்பொருளே. (67)

### வினைசெயல்வகை

ஆட்சிகொள் சூழ்ச்சி முடிவு துணிவெய்த லத்துணிவு
தாழ்ச்சியுட் டங்குத றீதென லால்விசை யற்குநன்றுக்
காட்சிதந் தெண்ணம றிற்றுணி வெய்தக் கலக்கமுரு
மாட்சிமெய்ஞ் ஞானம் புகன்ருன் றிருப்புல்லை வாழ்கண்ணனே. (68)

### தூது

துன்றிய வன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்
கின்றி யமையாத முன்றென லாலமை வோனிவனே
சென்றிட (வேண்டு மெ)னத்தூது புல்லைச் செழுமுகிலை
நன்றிசைத் தன்று பொறையோன் விடுத்தன னுட்டினுக்கே. (69)

### மன்னரைச் சேர்ந்தொழுகல்

பதினு லுலகிற்கு மன்னவன் புல்லைப் பதியரிய
முதலோ னருளுறப் போற்றுநெஞ் சேமுன்ன வன்மறுத்தாற்
கதியேது போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்னேற்
றுதல்யார்க் குமரிதென் றேதினர் வள்ளுவ ருண்மையுற்றே. (70)

## குறிப்பறிதல்

(மொண்டோதம் பெய்முகில் வண்ணா) முகத்தின் முதுக்குறைந்த
துண்டோ வுவப்பினுங் காயினுந் தான்முந் துறுமெனலாற்
பண்டோ ருலகர்க்குன் பாதத்திற் கொக்கும் பதுமமலர்
கண்டோதி னார்முகத் திற்கிணை யாய்ப்புல்லைக் காவலனே. (71)

## அவையறிதல்

அடைபே ருணர்வத் திருப்புல்லை யா(னிடத் தா)முணர்வ
துடையார்முற் சொல்லல் வளர்வதன் பாத்தியு ணீர்சொரிந்தற்
றிடைவே றிடத்துநின் புன்கவி யேற்றிநெஞ் சேபயனென்
படையாழி நாதன் கவிநா யகன் (புகழ் பாடுவையே). (72)

## அவையஞ்சாமை

பல்லா யிரம்பெருங் கோடியண் டங்கள் பணியநின்ற
புல்லாணி மெய்யரைப் போற்றுது பொய்யரைப் போற்றல்கற்றுங்
கல்லாமை கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்து
நல்லா ரவையஞ்சு வாரென மேலவர் நாட்டலினே. (73)

## நாடு

இளமைந்தர் மாதர் செறிவோங்க வன்பிணி யின்மைசெல்வம்
விளைவின்ப மேம மணியென்ப நாட்டிற்கிவ் வைந்துமிக்க
வளமென்ற பாண்டிநன் னாட்டிற் றிருப்புல்லை வைகுந்தமே
லுளனங் கிருந்து நிறைந்தா னுலகி னுயிர்க்குயிரே. (74)

## அரண்

நிலையுடை வேந்தர்க்கு வள்ளுவர் சொன்மணி நீருமண்ணு
மலையு மணிநிழற் காடு முடைய தரண்வகுத்தார்
கொலைபுரி கூற்றமெம் மேல்வரும் போதுபொற் கோதைமகி
முலைகடல் வாய்ப்புல்லை யச்சுதன் பாத மரணெமக்கே. (75)

## பொருள்செயல்வகை

அருளாள னுமெனப் புள்ளைவந் தாய்பொரு ளல்லவரைப்
பொருளாகச் செய்யும் பொருளல்ல தில்லை பொருளெனலாற்
றிருவார் பொருட்செல்வ மெங்கணுந் தானின் றிருவருளால்
வரு(மாதலா)லுன்னை மெய்ப்பொரு ளாக வழுத்துவனே. (76)

### படைமாட்சி

மீனவ தாரன் திருப்புல்லைக் கண்ணனம் மேலவன்சே
ரானென லாலன் றடற்படை நூற்றுவ(ர்க் க)ற்றதன்றோ
வூனயில் வேற்கை நிலைமக்கள் சால வுடைத்தெனினுந்
தானை தலைமக்க ளில்வழி யில்லெனச் சாற்றுவதே. (77)

### படைச்செருக்கு

மால்புரி கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்மெய்
வேல்பறி யாநகு மென்னுமவ் வீரரை மேன்மூடிவி
ளுல்பயில் கண்வளர் புல்லைப்பி ரான்கற்ப காடவியிற்
சேல்புரை கண்ணிய ரின்புறச் செய்வனத் தேவரென்றே. (78)

### நட்பு

பகர்தற் கரிய பரமன்புல் லாணியன் பத்தர்கணெஞ்
சகமலர் மேவிய மைந்தரு ளுண்மை யறிந்துமது
நிகர்சொன் முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்தக
நகநட் பதுநட் பெனவள் ளுவர்மு னவின்றனரே. (79)

### நட்பாராய்தல்

சொல்லா லழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளலென லாலவ் வகையுரியா
ரில்லாது தாழ்ந்துனைச் செல்லாது நின்ற வெனக்குநின்று
ளல்லாதொ ராதர வுண்டோபுல் லாணியி லச்சுதனே. (80)

### பழைமை

அழையானை முன்வரும் புல்லைப் பழம்பொரு ளாங்கருணை
மழையா னடிக்கட்பண் பில்லேனை யாவர் மதிப்பர்செந்த
மிழையாய் திருவள் ளுவர்விழை யார்விழை யாப்படுப
பழையார்கட் பண்பிற் றலைப்பிரி யாதார் பரிந்தென்பவே. (81)

### தீநட்பு

காதுநின் னுமம் புகாதுபின் னோபொய்க் கனவினுமின்
னாதுமன் னோவினை வேறுசொல் வேறுபட் டார்தொடர்பென்
றோது முறையினைக் கேளாது தீயரு ளுற்றனன் காண்
யாது திருவரு ளோபுல்லை யூரி லெழுமுகிலே. (82)

### கூடாநட்பு

பன்னூறு நின்று தொழுதகை யுள்ளும் படையொடுங்கு
மொன்னா ரழுதகண் ணீரு மனைத்தென் றுரைக்கவஞ்ச
ஏன்னுரை யேன்படைத் தானேவு னுந்தியி லன்றுதித்தோன்
பொன்னாகம் புல்லையிற் பூத்தவ னே(பழம் புண்ணியனே). (83)

### பேதைமை

இக்க ணொருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந்தான்
புக்கழுந் தும்*மள றென்றால்வன் பேதையென் போலியர்யார்
ளைக்கு மெய்யாயு னருள்பெற வேண்டுங் கணக்கதற்குத்
தக்க வகையொன்று சொல்லாய் புல்லாணித் தயாநிதியே. (84)

### புல்லறிவாண்மை

ஏது முதவா (வ)றிவிலா னெஞ்சுவந் தீதல்பிறி
தியாதுமில் லைபெறு வான்றவ மென்பதெண் ணிப்புல்லையூர்
நாதனை நோக்கித் தவட்புரி யாது நலமிலர்பாற்
காதலி னோடலைந் தீர்மக்க ளேபலன் காண்பதென்றே. (85)

### இகல்

பகலன்ன சீலம் படைக்குமின் பத்துவின் பம்பயக்கு
மிகலென்னுந் துன்பத்துட் டுன்பங்கெடி னென் றிசைத்தகனற்
புகலுன் மலரடி யென்றோர்க் கிகற்(றுன்பப்) புன்மையுறு
அகலு மணுகுநின் பேரின்பந் தென்புல்லை யாதிபனே. (86)

### பகைமாட்சி

பூணார் முலைப்புல்லைப் பூமேலு மங்கை புணர்ந்தருள்கல்
யாணா கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற வடுத்திருந்து
மாணாத செய்வான் பகையென்னுந் தந்திர மன்னர்க்கென்றார்
நீணா னிலம்புரந் தோயன்றுண் டோவிந் நெறியுனக்கே. (87)

### பகைத்திறந்தெரிதல்

கோளின்றி நாளும் பகைநட்பாக் கொண்டொழு கும்பண்புடை
யாளன் றகைமைக்கட் டங்கிற் றுலகென்ப தற்றுநட்பை
நீளும் பகைகொண்டு நின்றேனைப் புல்லையி னின்மகிமைத்
தாளின்வைத் தாளினித் தாளினம் போருகத் தாளின்பனே. (88)

---

*ம் - விரிக்கப்பட்டிருக்கிறது.

### உட்பகை

அன்போ டுணைப்பணி யார்(மனம் போல்வல்) லரப் பொருத
பொன்போலத் தேயு முரப்பொரு துட்பகை யுற்றகுடி
யென்போர்முன் னேரென துட்பகை காமமி(கன்)முதலாந்
துன்போட மாற்றிச் சுகானந்தந் தாபுல்லைச் சுந்தரனே. (89)

### பெரியாரைப்பிழையாமை

ஆந்தவப் பேறுமெய் யர்க்களிப் பாய்புல்லை யாழிசங்க
மேந்தரி யேந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடுமென லாற்கபி லன்வெகுளிக்
காந்தலின் மாய்ந்தா ரறுபதி னுயிரங் காவலரே. (90)

### பெண்வழிச்சேறல்

அறிவுகொண் டஞ்சுதற் கஞ்சாது (தன்)மனை யாளையஞ்சு
மறுமையி லாளன் வினையாண்மை வீறெய்த லின்றடக்கப்
பெறுமனைக் கஞ்சி யியமனைக் கெஞ்சி(ய) பேதையரா
யுறுமவர்க் கென்பய (னுண்டாந்) திருப்புல்லை யூரவனே. (91)

### வரைவின் மகளிர்

மாதில கப்பெறு மார்பா மகிதல வானுதற்கு
மாதில கப்புல்லை வாழ்முகுந் தாதம் மனைபொருந்த(ர)
தேதில் பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி
லேதில் பிணந்தழீஇ யற்றெனு (நூற்பொரு ளெண்ணிலனே.) (92)

### கள்ளுண்ணாமை

கோணுத நாணொன்று நல்லாள் புறங்கொடுக் குங்கள்ளென்னும்
பேணுப் பெருங்குற்றத் தார்க்கென்பர் புல்லைப் (பிரான்வெறுக்க)
வீணு மயக்குற்று மெய்மயக் குற்ற வெறிமயக்கன்
ஞ(னுல்வ) ருங்குற்ற மோதுவர் மேற்குற்ற மொன்றில்லையே. (93)

### சூது

தீதின் முயலுஞ் சிறுமை பலசெய்து சீரழிக்குஞ்
சூதின் வறுமை தருவதொன் றில்லெனல் சூதுரக
கேதனன் கேடமைந் தானவன் றீயுரை கேட்டலைவ
ரோதுவெங் கானடைந் தோர்புல்லை மாவினங் குய்ந்தனரே. (94)

மருந்து

வாறழ லையமொத் தற்ற தறிந்து கடைப்பிடித்து
மாறல்ல துய்க்க துவரப் பசித்தென வள்ளுவர் நூல்
கூற லறிந்துடல் பேணுத லுன்னடிக் கோகனகப்
பேறு பெறுந்தவஞ் செய்யவன் றேபுல்லைப் பேரின்பனே. (95)

குடிமை

அகிலாண்டம் யாவு மரவிந்தத் தாள்கொண் டளந்தபுல்லை
நகராதி வைகுந்த நாராய ணுநகை யீகையின்சொ
லிகழாமை நான்கும் வகையென்ப வாய்மைக் குடிக்கென்பது
சகமே லுணைத்தொழும் அன்புடை யார்குடித் தன்மையதே. (96)

மானம்

மணைவாழ் விணைமெய் யெனநம்பி (யுன்னை மறந்த)குன்றி
னணையாருங் குன்றுவர் குன்றுவ குன்றி யணையசெயி
னெனவோதி யுஞ்சிறி யேன்மலை போர்பழி யெய்தினின்று
தணியே தளர்ந்தனன் தஞ்சப்புல் லாணித் தயாநிதியே. (97)

பெருமை

மணச்செல்வி யாய்மலர் மாதுறை புல்லைச்செல் வாசிறியா
குணர்ச்சியு ளில்லைப் பெரியாரைப் பேணிக்கொள் வேமென்னு
நோக்
கெணிச்சொலு நூலென் னளவிற்கண் டேன்கண்ட தென்னெனின்
யணைச்சகு ளன்பரைப் பேணிக்கொள் ளாமை யகமுதித்தே. (98)

சான்றாண்மை

கருடற்கு நாயகன் புல்லைப்பி ரான்(கழல் காட்டு)மின்மை
யொருவற் கிளிவன்று சால்பென்னுந் திண்மையுண் டாகப்பெறி
னருமைச்சொல் யான்கண்டு சால்புசற் றேனுமில் லாதுலக
விருளிற் கலங்க ளிளிவென் றுரைப்ப ரெவருமின்றே. (99)

பண்புடைமை

கோல வளம்புல்லைக் கோவிந்தன் நன்மதிக் கூர்மையற்று
மேலும்பண் பற்றுதின் றேற்கருள் கூர்வித மெவ்விதமோ
நூல்வள் ளுவரன் றரம்போலுங் கூர்மைய ரேனுமரம்
போல்வர்மக் கட்பண்பில் லாதவ ரென்னுமிப் பூதலத்தே. (100)

### நன்றியில்செல்வம்

கொடாதுல கெங்கணுங் கீர்த்தியென் றேசொலக் கேட்டுநச்சப்
படாதவன் செல்வ நடுவூ ருணச்சு மரம்பழுத்தற்
றடாதுசெய் நன்றியில் செல்வத்தர் பாற்சென் றலைந்துநொந்து
விடாதெமக் கின்பங் கொடாது விடான்புல்லை மேலவனே. (101)

### நாணுடைமை

ஏனுடை மாந்த ருலகத்து ளோரி ழிகருமத்தா
னாத னாத் திருநுத னல்லவர் நாணுப்பிற
நீணில மேலென வோதுதல் கண்டுநின் றெப்பழிக்கு
நாணில னுய்த்திரிந் தேனைவந் தாள்புல்லை நாயகனே. (102)

### குடிசெயல்வகை

திருகற் படாத மன(த்திடத் தாற்)குடி செய்வலென்னு
மொருவற்குத் தெய்வ மடி தற்றுத் தான்முந் துறுமெனலா
லருமக்கள் புல்லையிற் றெய்வச் செயலென் றறிந்துகுடி
பெருகச் செயிற்றெய்வ முந்துறற் கையமென் பேசுவதே. (103)

### உழவு

றெட்டலங் கைக்கொள்வர் பின்னவ ரென்னநின் ருேர்புல்லையோர்
மூட்ட முழுக்குடி வல்லவ ராகமுன் பாயுழுதுண்
டிட்ட நிலத்ின்க ணோரினு நன்ரு லெருவிடுதல்
கட்டபி னீரினு நன்றதன் காப்பென்பர் கற்றவரே. (104)

### இன்மை

தின்று நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்யா
தொன்றுங்கண் பாடரி தென்றுகண் டோர்புல்லை யூர்தெடியோன்
மன்றலம் போருகச் செல்வியைச் சேர்ந்துநல் வாழ்வுபடைத்
தென்று மநந்த சயனனென் றுயின னேத்துதற்கே. (105)

### இரவு

கழிவின் றிரக்க விரத்தக்கார்க் காணிற் கரப்பினவர்
பழிதப் பழியன் றெனலாற்றென் புல்லைப் பதியிற்சென்றே
னழிவின் றிவாழும் பொனண்ணலைப் போற்றி யருளிரந்தேன்
பொழியின்ப நல்கில னென்னிலென் மேலென் புகும்பழியே. (106)

### இரவச்சம்

ஒரையெல் லாம்பெறு வாய்புல்லை (யாற்சென் றி)ரப்பனிரப்
பாரையெல் லாமிரப் பிற்கரப் பாரிர வன்மினென்று
சீரையெல் லாமெடுத் தோதிடல் கண்டு தெளிந்துகொள்ளா
யூரையெல் லாஞ்சுற்றி வன்கண்ணர் பாற்சென் றுழலுநெஞ்சே (107)

### கயமை

செஞ்சொற்க ணன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலரெனுஞ் சொற்பொரு ளோர்மைகண்டு
வஞ்சக் கயவரிற் சேராது புல்லை வரதனிரு
கஞ்சத் திருவடி காண்டற்கு வேண்டுங் கருத்தெமக்கே. (108)

பொருட்பால் முற்றும்.

## காமத்துப்பால்

### தகையணங்குறுத்தல்

அலாயுதன் பின்னவன் யார்க்குமுன் னோன்புல்லை யண்ணல்வெற்பிற்
சொலாயிழை பேரெழி லென்னை மயக்குமந் தோவணங்கு
கொலாய்மயில் கொல்லோ கனங்குழை மாதர்கொன் மாலு
மென்னெஞ்
சுலாவு புகழ்த்தமிழ் வள்ளுவ ரோதுத லொப்பென்னவே. (109)

### குறிப்பறிதல்

ஆக்கத்தெண் ணீரமு தந்நா ளமரர்க் களித்துமுது
மாக்கட்கிந் நாளெய்தப் புல்லைவந் தோன்வரை மங்கைகண்ணோ
நோக்கத் தவன்கண்க ளொத்திட லாற்கண் ணொடுகண்ணிணை
நோக்கொக்கின் வாய்ச்சொற்க ளென்ன பயனு மிலவென்பவே (110

### புணர்ச்சிமகிழ்தல்

துனியகல் வித்து மகிழ்ந்துதாம் வீழ்வார்மென் றோட்டுயிலி
னினிதுகொ லாமரைக் கண்ணு னுலகென் றிசைத்தல்கண்டு
கனியித ழுண்டேனைத் தோய்ந்தின்ப வாரியிற் கண்டுயின்றுன்
றனிமலர்த் தாமரைக் கண்ணுன்புல் லாணித் தலைவன்வந்தே. (111)

### நலம்புனைந்துரைத்தல்

நிலமே லுறுமலர் காணின்மை யாத்திநெஞ் சேயிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்றுயர்ந் தோர்முன் பகர்தல்கண்டு
மலர்மாது வாழ்புல்லை மாயோன் பொருப்பின் மடமயிற்கு
நலமே புனைந்து சொலவேண்டு மோவினி நானுமின்றே. (112)

### காதற்சிறப்புரைத்தல்

மயிலியற் பூமங்கை மன்னன்புல் லாணி வரைக்கணின்சொற்
குயிலொடு யான்கொண்ட நட்பிற்கு வேறொக் குமோவுடம்பொ
டுயிரிடை யென்னமற் றன்ன மடந்தையொ டெம்மிடைநட்
பியல்பென வள்ளுவர் காதற் சிறப்பிற்சொ லீதன்றியே. (113)

### நாணுத்துறவுரைத்தல்

நறுந்துள வப்புயத் தோன்புல்லை நாட்டொரு நங்கையினு
னுறந்தனி யாய்மட லூர்தற்கு மாலையுத் றென்றொடலைக்
குறுந்தொடி தந்தாண் மடலொடு மாலை யுழக்குந்துய
ரறிந்துகொ ளீரென வள்ளுவர் சொல்லுத லத்தன்மையே. (114)

### அலரறிவுறுத்தல்

அலர்மகள் சேர்புல்லை யச்சுத னட்டி னருங்குணத்தை
யலர்செயல் கண்டுகொண் டேனயல் யாவ ரறிவரினை
யலர்வரு சீர்மல ரன்னகண் ணாளரு மையறியா
தலரெமக் கீந்ததிவ் வூரெனல் போலு மமைந்ததுவே. (115)

### பிரிவாற்றாமை

பொன்கண்ணர் புல்லை யருட்கண்ணர் முன்புணர்ந் தோர்பிரிவு
பின்கண் ணறச்சொல்லின் மேவலென் றாசை பிரிவுரைக்கும்'
வன்கண்ண ராயி னரிதவர் நல்குவ ரென்றுநசை
நன்கென்ன வள்ளுவ ரின்கன்னல் போல நவின்றனரே. (116)

### படர்மெலிந்திரங்கல்

அன்புசெ யின்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்காற்
றுன்ப மதனிற் பெரிதென வள்ளுவர் சொல்லியதாற்
றென்புல்லை யூரர் செயலென்ன மேலெனச் சேர்ந்தவன்றோர்
பிக்பிரி வாற்பெற்ற துன்பமற் றின்பம் பெறுவதற்கே. (117)

### கண்விதுப்பழிதல்

வானோர்க் கிறைபுல்லை மால்வரக் கண்டு வராதவின்று
சேனோக் கிரங்கிக் கலுழும தென்புத் திகுதுமெனத்
தானோக்கித் தாமே கலுழு மிதுநகத் தக்கதுடைத்
தேநோக்கி முன்பின் வருந்தலென் றெள்ளற் கிடப்பெற்றதே. (118)

## பசப்புறுபருவரல்

மறந்தார் மனத்தினை விட்டகன் றார்புல்லை மாமகள்பாற்
சிறந்தார் மயலிற் பயந்தெனென் றரவர் செய்கைவிள்ளா
ரறந்தானன் றேபசந் தாளிவ ளென்பதல் லாலிவளைத்
துறந்தா ரவரென்பா ரில்லென வள்ளுவர் சொல்வதொத்தே. (119)

## தனிப்படர்மிகுதி

பொன்னூர் மார்பினன் புல்லாணி யூரன் புணருநல
முன்னு திருக்கிலென் மின்னுசை கொள்ளு மொருதலையா
னின்னுது காமங்காப் போல விருதலை யானுமினி
தன்னு ளுரையுண்மை யுன்னு ளின்னுளி லறிவிக்கவே. (120)

## நினைந்தவர்புலம்பல்

வள்ளல்புல் லாணியெம் மால்புணர் சீர்மற வேன்வருத்தம்
தள்ளவொண் ணாதெனில் யான்மறந் துய்வதெத் தன்மைநெஞ்சிற்
கொள்ள(ண்) மறப்பி னெவனுவன் மற்கொன் மறப்பறியே
னுள்ளினு முள்ளஞ் சுடுமென் பவர்சொல் லுறுதிகண்டே. (121)

## [கனவுநிலையுரைத்தல்

மாதவர் புல்லை மலர்மே லிருந்த மடந்தைமன்ன
ராதவ ரென்(முன்) கனவில்வந் தென்னை யணைந்தனர்காண்
காதலிற் காதலர் தூதொடு வந்த கனவினுக்கி
யாதுசெய் வேன்கொல் விருந்தெனி லென்னினி யான்
செய்வதே. (122)

## பொழுதுகண்டிரங்கல்

பலவா யொன்றுய்நின் றெனையாண்ட புல்லைப் பதித்திருமங்
கலவாசு தேவ ரகலா தகலுமிக் காலங்கண்டோ
குலவாசைக் காதல ரில்வழி மாலை கொலைக்களத்தே
திலர்போ லவருமெனத்தேர்ந்து வள்ளுவர் செப்பியதே. (123)

## உறுப்புநலனழிதல்

படியொடு வான்பணி (யும்)புல்லை மாயன் (பனிவரையிற்)
பிடியொடு நேர்வார் பிரிவைச் சிதையுறப் பேவிளப்புங்
கொடியொடு சேணிற் செலுங்கொடி யார்கொடு மையுரைக்குந்
தொடியொடு தொல்கவின் வாடிய தோளெனச் சொல்லல்
கண்டே. (124)

### நெஞ்சொடுகிளத்தல்

சுவையின் னிதழுண்டு சென்றவர் புல்லைவந் தோருழைச்செல்
லுவைகண் ணொடேக வரைக்காண்டற் கோவருத் தாதெனைநீ
திவையுள்ள மேவன் னுடைருங்கண் ணுங்கொளச் சேறிநெஞ்சே
யிவையென்னைத் தின்னு மவர்க்காண லுற்றென்
றிசைத்தனரே. (125)

### நிறையழிதல்

அணிமலர் சூடி யிதப்பேசி யென்னை யணையமனத்
துணிபுல்லை வெண்ணெய் நுகர்மாயக் கள்வன்சொற்
கண்டுகொண்டோ
மணிமொழி வள்ளுவர் தாமெனக் காகப்பன் மாயக்கள்வன்
பணிமொழி யன்றேநப் பெண்மை யுடைக்கும் படையென்றதே.
(126)

### அவர்வயின்விதும்பல்

கண்ணாரப் பூம்பொழிற் புல்லாணிக் கண்ணன் கமலத்தினெண்
கண்ணாரத் தன்முன் கலந்தான் பசப்புக் கலந்ததின்றென்
கண்ணாரத் திண்புயத் தோடு மினிக்காண் கமற்கொண்கனைக்
கண்ணாரக் கண்டபி னிங்குமென் மென்றோட் பசப்புக்களே. (127)

### குறிப்பறிவுறுத்தல்

அணைந்தருள் புல்லைத்தண் ணந்துறை வன்றணந் தானெனல்யான்
கணந்தனிற் காண்ப னதற்குமுன் கைவளை காட்டிற்றவன்
துணிந்து பிரிவினைச் சொல்லுதன் முன்னந்தண் ணந்துறைவன்
றணந்தமை நம்மினு முன்ன முணர்ந்த வளையென்னவே. (128)

### புணர்ச்சிவிதுப்பல்

பாடற்பண் செந்தமி ழாழ்வார்சொற் புல்லைப் பதிபுணர்ச்சி
நாடற்கென் றெய்திலன் சென்றனெஞ் சென்செய்யு நான்கலவி
யாடற்கின் றூடற்கட் சென்றேன்மற் றேழி யதுமறந்தூ
கூடற்கட் சென்றதென் னெஞ்செனல் போலிக் குவலயத்தே. (129)

### நெஞ்சொடுபுலத்தல்

உவணந் தனைக்கொண்ட புல்லையுள் ளோர்திரு வுள்ளம்பொன்போ
லவரங் கிருத்த லறியா தெனைவிட் டவரிலுற்றுய்
கவனஞ் செறியுநெஞ் சேயவர் நெஞ்சவர்க் காதல்கண்டு
மெவனெஞ்சே நீயெமக் காகாத தென்ன விசைத்தலொத்தே. (130)

### புலவி

முக்கட் புராரிக்கு முன்னின்ற புல்லை முகில்புலவி
கைக்கச்செய் யாதெனை மேவிடு மோசெய் கலவியின்மு
யக்கத்திற் குப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றா னீள விடலென்று வள்ளுவர் விள்ளுவரே. (131)

### புலவிநுணுக்கம்

புல்லாணி மால்வெற்ப கண்ணாற் பொசிப்பர் பொருள்விழையன்
பில்லார்நின் மார்பினைத் தீண்டேன்முன் வள்ளுவர் பெண்ணியலா
ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர் நண்ணேன் பரத்தநின் மார்
பல்லார் குழல்சொற் புலவி நுணுக்க மறைந்தனரே. (132)

### ஊடலுவகை

பூமின் கொழுநன்றென் புல்லாணி நாட்டிற் புணர்ச்சியினுந்
தோமொன் றிலார்க்குநன் றூடல தின்பஞ் சொலற்கெளிதோ
யாமென் றறிகு வுணலினு முண்ட தறலினிது
காமம் புணர்தலி னூட லினிதெனக் கண்டனரே. (133)

காமத்துப்பால் முற்றும்.

**திருப்புல்லாணிமாலை முற்றிற்று.**

---

## பழைய பதிப்பின் முகவுரை.

தெய்வப்புலமைத்திருவள்ளுவராற் செய்யப்பெற்ற திருக்குறளின் திட்பநுட்பம்பொருந்திய கருத்துக்களைத் தொன்றுதொட்டுப் பல தமிழ்ப் பெரும்புலவரும் தத்தம் பாடலுக்கிடையே வேண்டுமிடங்களில் எடுத்தாளுவது பலருமறிந்ததே.

அம்மட்டினமையாது "முன்னோர்மொழி பொருளேயன்றியவர் மொழியும், பொன்னேபோற்போற்று"வராகித் "'தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப்பெய்யும் (பெரு)மழை' யென்றவப், பொய்யில் புலவன் பொருளுரை"* என மணிமேகலையிற் சீத்தலைச் சாத்தனாரும், "சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின்" எனவும், "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை" எனவும் திருக்களிற்றுப்படியாரில் உய்யவந்ததேவரும், "தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி,வலைப்பட்டார் மற்றையவர்" என

---

* மணிமேகலை காதை 22. அடி 59—61.

நெஞ்சுவிடுதூதிற் கொற்றவன் குடி உமாபதிசிவாசாரியரும், சொற்றொடர்களாகவும், முழுச்செய்யுளாகவும் அருமைபாராட்டி எடுத்தாளுவாராயினர்.

பின்னுஞ்சிலர், திருக்குறளிலோரோரதிகாரப் பொருளுக்கும் ஓரொரு சரிதத்தை உதாரணமாக நாட்டி, அதனைமுடிக்கும் ஓரொரு குறள் வெண்பாட்டை யிறுதியிற்கூட்டி, வேற்றுப்பொருள்வைப் பென்னுமணி பெற வெவ்வேறு பாமாலைகளுஞ் செய்துபோந்தனர்.

அப்பாமாலைகளாவன:-சோமேசர் முதுமொழிவெண்பா, சிவசிவ வெண்பா, இரங்கேசவெண்பா, வடமலைவெண்பா என்னு மிவை களாம்.

இம்முறைபற்றியே இப்பாமாலையும், திருக்குறளின் ஓரோரதி காரத்தின் ஓரொரு குறட்பாவை மேற்கோளாக வைத்து அதற்கி சைந்த விஷயங்களாயமைத்துத் திருப்புல்லாணியிற் கோயில் கொண்டெழுந்தருளிய தெய்வச்சிலைப்பெருமாள்பேரிற் ஞேத்திர ரூபமாகிய 133 கட்டளைக் கலித்துறைச் செய்யுளால் இயற்றப் பட்டிருக்கிறது.

இதில், கட்டளைக்கலித்துறையுள், குறள்வெண்பாவையமைத் திருக்குந்திறமையினருமை பாராட்டத்தக்கதே. இசையாலும் எதுகை மோனைகளாலும் ஒன்றற்கொன்று வேறுபட்ட விருதிறப் பாட்டிற்கேகதேசத்தில் ஐக்கியந் தோன்றப் பாடுமிடத்துண்டாகு மிடர்ப்பாடு பலவாதலால், ஓரோவழி மேற்கோளில் ஓரோரெழுத்து விரித்தும், தொகுத்தும், வகையுளிகொண்டும் படிக்கத்தக்கதாயிருக் கிறது. இடையிடையே சிலகுறள்களுக்குள்ள அதிகாரப்பொருளைக் கருதாது, தோத்திரத்துக்கேற்றவாறு பிறிதுபொருள்கொள்ளவும் சொற்சுவை பொருட்சுவை சுருங்கவும் பாடப்பட்டிருக்கிறது.

ஒருபிரதியே கிடைத்தமையால், பிழையறப்பரிசோதிப்பதற்கும், சிதைந்த இடங்களில் உண்மைப்பாடங்கண்டெழுதுவதற்கும், இய லாமற்போயிற்று. ஆயினும், ஒருவாறு இடையிடையே வீழ்ந் திருந்த எழுத்துப்பிழையைத் திருத்தியும், சிதைந்த இடங்களில் வேண்டுஞ் சொற்களைப் பிறைக்குறி ( ) கொடுத்தமைத்தும் இம் முறை வெளியிடப்பெறுகிறது. இப்பாமாலை இயற்றியவரது பெயர் முதலியவொன்றும் நன்கு விளங்கவில்லை. விளங்கியபின் வெளியிடப் படும்.

இந்நூலெழுதிய ஏட்டுப்பிரதியைச்சங்கத்துக்குக்கொடுத்துதவிய ஸேதுஸம்ஸ்தானவித்வான் ஸ்ரீமத்—ரா. ராகவையங்காரவர்களுக்கு இச்சங்கத்தார் நன்றிபாராட்டக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

இங்ஙனம்,

திரு. நாராயணையங்கார்,

செந்தமிழ்ப்பத்ராதிபர்.